THE HON. SRI M. BHAKTAVATSALAM : The situation has considerably improved on the whole. I have given information on this point some time back. There seems to be some progress.

*Unani hospitals*

* 309 Q.—SRI T. S. RAMASWAMI (on behalf of SRI K. SATTANATHA KARAYALAR) : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(a) the number of Unani hospitals in the State; and

(b) the manner in which the medicines are supplied to these hospitals?

THE HON. SRI M. A. MANICKAVELU : (a) None.

(b) Does not arise.

*Wild Life Sanctuary (Kodaikkadu)*

* 310 Q.—SRI A. VEDARATHNAM: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

தஞ்சை ஜில்லாவிலுள்ள கோடிய காட்டை மிருக சரணாலயமாக்கக் கோரி வந்த வேண்டுகோளின் பேரில் அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The proposal is being examined in consultation with the State Chief Conservator of Forests and the Collector of Thanjavur district.

SRI A. VEDARATHNAM : கோடியகாட்டை மிருக சரணாலயமாக ஏற்படுத்துவதற்கு முன் அங்குள்ள மான்கள் சுட்டுக் கொல்லப்படாமல் இருப்பதற்கு தக்க பாதுகாப்பு அளிக்க அந்த ஆலோசனைக் கமிட்டி சில தீர்மானங்கள் அனுப்பியிருக்கிறதே, அவற்றை அரசாங்கம் பரிசீலித்ததா ? அதன் பேரில் என்ன முடிவு எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப் பரிசீலித்து மான்கள் சுடப்படாமல் இருப்பதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. என்னென்ன செய்யப்பட்டிருக்கிறது என்பதுபற்றி தனிக்கேள்வி கேட்டால் சொல்கிறேன்.

SRI A. VEDARATHNAM : மற்ற முயற்சிகள் எடுத்துக்கொள்வதற்கு முன்னதாக "நொட்டோரியஸ் போச்சேர்ஸ்", பிரக்கியாதி பெற்ற கள்ளவேட்டைக்காரர்கள் என்று தெரிந்தும் அவர்களுக்கு அரசாங்கம் ஒன்றுக்கு மேற்பட்ட துப்பாக்கி லைசென்ஸ் வழங்கியிருக்கிறது: அவற்றை ரத்து செய்யவோ அல்லது அதன் பீரியட் முடியும்போது அதை ரத்து செய்வதற்கோ அல்லது புதிதாக திரும்ப வழங்காமல் இருப்பதற்கோ அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : என்னென்ன தடுப்பு முறையாக எடுத்துக்கொள்ள முடியுமோ அவைகள் எல்லாம் எடுத்துக்கொள்ளப்படுகிறது.